என்னுடைய பிரியநண்பனான அவனைவிடவேண்டும்' என்று சொல்லிற்று. தேவர்களில் மிகச்சிறந்தவனான இந்திரன் அந்தராஜதர்மாவின் வசனத்தை அறிந்துகொண்டு கௌதமனுக்கும் அனுமதிகொடுத்துவிட்டுப் பிறகு பிரீதியுள்ளவனாகிப் புறப்படுவதில் உற்சாகமுள்ளவனானான். பிரஸித்திபெற்ற அழகான அந்தராஜதர்மாவும் தன்இருப்பிடம்போய்ச்சேர்ந்தது. குரூரனும் மித்திரத்ரோஹம்செய்தவனும் மனிதர்களில் அதமனும் விடப்பட்டவனுமான அந்தக்கௌதமன் பொருட்சுமையுடன் அப்பொழுது வேடச்சேரியைவந்தடைந்தான். அவ்விடத்தில் நரகத்திற்கொப்பான வேடஸ்திரீயின்சரீரத்தில்இவன் பிறப்படைந்தான். அப்பொழுது தேவக்கூட்டங்களால் அவனுக்கு இப்பெரியசாபமிடப்பட்டது. பராக்ரமமுள்ளராக்ஷஸராஜனால் பக்ஷிராஜாவானது தஹிக்கப்படும்பொழுது சிதைக்குப்பக்கத்தில் கறந்துகொண்டிருக்கும் காமதேனுவானது அந்தராஜதர்மாவைப் பிழைக்கச்செய்தது. குற்றமில்லாதவனே! அப்பொழுது அக்காமதேனுவின் வாயிலிருந்து நழுவியபாலின் நுரையானது காற்றினால்விழுக்கப்பட்டு ராஜதர்மாவின் அந்தச்சிதையை அடைந்தது. அதன்பிறகு, தேவராஜன் விரூபாக்ஷனுடைய பட்டணத்தைஅடைந்தான். அப்பொழுது விரூபாக்ஷனும் அந்தஇந்திரனைநோக்கி, 'தேவனே! காஸ்யபரின்புத்திரனான என்ஸஹோதரன் ஜீவிக்கவேண்டும்' என்று திரும்பவும்திரும்பவும் வேண்டினான். ஈசனானஇந்திரனும் விரூபாக்ஷனை நோக்கி 'முன்னொருகாலத்தில் பிரம்மதேவர் கோபத்தால்ராஜதர்மாவைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினார். 'நீ என்னுடையஇச்சபையை எப்பொழுதும் பார்க்கவாராமலிருக்கிற காரணத்தால் தர்மஸ்வபாவமுள்ளதும் பரமாத்மாவைஅறிந்ததுமான கொக்காகப்பிறக்கப்போகிறாய். பாபகார்யத்தைச் செய்கிறவனும் வேடச்சேரியிலிருப்பவனும் நன்றிகொன்றவனும் சூத்திரமடந்தைக்குப்பதியுமான ஒருபிராம்மணன் ஒருஸமயம் உன்னுடைய இருப்பிடத்திற்குவருவான். அவன் எப்பொழுது கொல்வானோ அப்பொழுது உனக்கு விடுதலைவரும்' என்று அந்தராஜதர்மாவுக்குச் சொன்னார். ஆகையால், இந்தராஜதர்மாவானது உத்தமஸ்தானத்திலிருக்கும்பிரம்மதேவரின் உலகத்தை அடைந்தது' என்றுசொன்னான். குலத்தைக்கெடுத்தவனும் கெட்ட செய்கையுள்ளவனுமான அந்தப்பிராம்மணனும் நரகத்தை அடைந்தான். அரசஸ்ரேஷ்டனே! ஸபைமத்தியத்தில் அந்த வாக்யமானது நாரதரால் சொல்லப்பட்டது. இதைக்கேட்டநானும் உனக்கு உள்ளபடி சொன்னேன். அரசனே! பிரம்மஹத்திசெய்தவனுக்கும் கள்

குடித்தவனுக்கும் திருடனுக்கும் அப்படியே விரதத்திலிருந்து விலகியவனுக்கும் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது. நன்றிகொன்றவனுக்குப் பிராயச்சித்தமில்லை. நன்றிகொன்றவனுக்கு யசஸ்ஏது? ஸ்தானமேது? ஸுகமேது? நன்றிகொன்றவன் நம்பத்தக்கவனல்லன். நன்றிகொன்றவனுக்குப் பிராயச்சித்தமில்லை. மனிதன் விசேஷமாக மித்திரர்களுக்கு த்ரோஹத்தைச் செய்யாமலிருக்கவேண்டும். மித்ரர்களை த்ரோஹிப்பவன், கோரமானதும் முடிவில்லாததுமான நரகத்தைஅடைவான். குற்றமில்லாதவனே! நன்றியறிவுள்ளமனத்துடனும் மித்திரத்தன்மையுடனும் இருக்கவேண்டும். மித்திரனிடமிருந்து யாவுமுண்டாகும். மித்திரன் சிறந்தபாக்யமென்று கூறப்படுகிறான். தனலாபம் மித்திரலாபம் இவ்விரண்டினுள்ளும் மித்திரலாபம் சிறந்ததாகும். மித்திரனால் தனங்கள் எளிதில்கிடைக்கக்கூடும். மித்திரனால் முயற்சிசெய்யக்கூடும். மித்திரனானவன் அபிமானிக்கப்பட்டதும் ஸ்நேஹமுள்ளதுமான பயனாவான். ஸாதுக்களுக்குள்ளபயனான மித்திரனை அறிவுள்ளவன் தன்ஜனங்களுடன்கூடி மர்யாதைகளுடன் பூஜிக்கவேண்டும். கிருபணனும் குலத்தைக் கெடுத்தவனும் மித்திரர்களுக்கு த்ரோஹஞ்செய்பவனும் குலத்துக்குக் கொள்ளிபோன்றவனும் குலத்திற்குஅதமனுமான பாபியை, அறிவுள்ளவர்கள் விலக்கவேண்டும். குற்றமில்லாதவனே! ஸாதுக்களின் சேர்க்கையைப்பற்றியதும் மித்திரர்களை த்ரோஹஞ்செய்யும் நன்றிகொன்றவனைப்பற்றியதுமான இந்தஅறிவு என்னால் கூறப்பட்டது. திரும்பவும் எதைக்கேட்க விரும்புகிறாய்?" என்றுசொன்னார். ஜனமேஜயரே! பிறகு, மஹாத்மாவானபீஷ்மரால் சொல்லப்பட்ட இந்த வாக்யத்தைக்கேட்டு யுதிஷ்டிரரானவர் ஸந்தோஷமடைந்த மனமுள்ளவராயிருந்தார்" என்று சொன்னார்.

## ஆபத்தர்மம் முற்றிற்று.

---